

ஓவியம் : டி. கே. பத்மினி

கசடதபற மே 1972 30 காசு 20

## 1

சாத்துயர் கேட்டுப் போகும்
சுற்றத்தார் சாயல் காட்டிக்
கழன்றது ரத்த வெள்ளம்
குத்துண்ட விலாப்புறத்தில்.

அவர்பெயர் ஒன்றினேடு
என்பெயர் ஒன்றிப் போச்சாம்
படுக்கையில் தூங்கும் என்னைக்
காந்தர்வர் கொன்று போனர்.

பெயரையே சொல்லிப் பார்த்துத்
திகைக்கிறேன். எனக்கென்பேரே
எப்படித் துரோகமாச்சு.

## 2

வெளியில் வந்தான்
நடுநிசியில்
ஒன்றுக் கிருந்தான்
மரத்தடியில்

நெற்றுத் தேங்காய்
அவன் தலையில்
வீழ்ச்சியுற்று
உயிர்துறந்தான்.

ரத்தக் களங்கம்
இல்லாமல்
விழுந்த நோவும்
தெரியாமல்
தேங்காய் கிடக்கு
போய்ப்பாரும்.

## 3

மூடடைகள்
அனுப்பக் காத்த
மூட்டைகள்
அவற்றைப் போலப்
பயணிகள்
தூங்கினர்கள்
ஆடைக்குள்
சுருட்டிக் கொண்டு
காரணம்
இலாமல் நெஞ்சம்
உணர்த்திய
பயத்தைப் போலத்
தொலைவிலே
இரவினூடே
ரயில் முகம்
வைரஊசி.

கிணறுகள்
கால்முளைத்த
கிணறுகள்
இங்குமங்கும்
மூத்திரம்
நின்று பெய்யும்
வியாபாரிப்
பெண்ணைப்போல.

ஏணியை
நிமிர்த்துப்போட்டு
ஏறுவார்
அன்றைக் குண்டு
ஏணியைப்
படுக்கப் போட்டு
ஏறுவார்
இன்றைக்குண்டு.

## 4

விழிக்கிருன்
முழங்காலொன்று
காணலே.
பொசுக்கப்பட்டு
சதைகளும்
எலும்புமாகக்
கிடப்பதைத்
தெரிந்து கொண்டான்.
வைக்கிருன்
கூறுகட்டி
அறுவையில்
எடுத்த ஈரல்ப்
பகலவன்
சாய்வதற்குள்
பண்டமும்
விற்றுப் போச்சு.
வயிற்றடி

ரோமக் காட்டில்
வருவாயைப்
பொத்தி வைத்துப்
படுக்கிறான்
கனவில் யாரோ
பாக்கியும்
எரிக்கிறார்கள்.

## 5

பெயர் சொல்லிக் கூப்பிட்டாள்
புரண்டு கூடப்
படுக்கவில்லை அதுஒன்றும்
கொள்ளிக் கட்டை
கொண்டு வந்து ஒவ்வொன்றின்
காலைச் சுட்டாள்

ஒவ்வொன்றாய் எழுந்திருந்து
என்ன என்ன
அப்பாவை எழுப்பென்றாள்
பந்தம் தந்தாள்

பந்தத்தால் அப்பாவின்
தாடி மீசை
எல்லாமும் கொளுத்திவிடப்
புரண்டெழுந்தான்.
ஆயிற்றா உட்கார
லாமா என்றான்.

அப்பாவும் பிள்ளைகளும்
உட்கார்ந்தார்கள்
உடுப்புகளைப் புறம்போக்கிப்
படுத்துக் கொண்டாள்.

வள்ளிக் கிழங்கின்
பதமாக
வெந்துபோன
அவள் உடம்பைப்
பிட்டுத் தின்னத்
தொடங்கிற்று
ஒவ்வொன்றாக
அவையெல்லாம்

எல்லாக் கையும்
முலைகளுக்குப்
போட்டி போட்டுச்
சண்டையிட
அப்பன் கொஞ்சம்
கீழ்ப்புறத்தில்
கிள்ளித் தின்றான்
அவ்வப்போ.

## 6

I

முகக்கண்கள் அழுதால் கண்ணீர்
விடுகிறான் என்னும் நீங்கள்
மயிர்க்கண்கள் அழுதால் மட்டும்
வியர்க்கிறான் என்று சொல்வீர்.
வேலைசெய் என்னும் உங்கள்
வார்த்தைகள் குசுப்போல் நாறக்
கழிவறை உலகம் செய்தீர்.

II

குருடுகள் காலூனங்கள்
பித்துக்கள் பிறக்கும் போதே
வேலையைத் தவிர்க்கும் மார்க்கம்
தெரிந்ததால் பிழைத்துக் கொண்டார்.

III

நானொரு குருடனாக
நானொரு முடவனாக
நானொரு பித்தனாகப்
பிறக்காமல் போய்விட்டேனே.

## 7

உங்கள் எதிரே நான் வரும் பொழுது
என்னைப் பிடித்துக் கொல்லப்
பார்க்கிறீர்

'எங்கள் காற்றை நீ எப்படி
உயிர்க்கலாம்?'

காற்றை உண்டு வாழும் வழக்கம்
உள்ளவன் இல்லை நான் எனச் சொல்லி
மூக்கில்லாத முகத்துக்கு உங்கள்
பார்வையைக் கொணரப் பியாய்
உணர்கிறீர்

நீங்கள் என்னை விட்டுப் போனதும்
ஒளித்து வைத்த மூக்கை யெடுத்துப்
பொருத்திக் கொண்டு உயிர்க்கத்
தொடங்கினேன்
தொலைவில் நீங்கள் குலைகிறீர்
காற்றில்லாத பலூனைப் போல!

## 8

தூக்கம் வரைக்கும் யாவரும் சித்தர்
தூக்கத்துக்கப்புறம் யாருடா சித்தர்?
தூக்கத்துக்கப்புறம் என்னன்னு கேளு
தூக்கிக் காட்றேன் தெரியுதா பாரு.

—ஞானக்கூத்தன்.

# கனவுக் கதை*

இலக்கியச் சிந்தனை இந்த வருடம் சுந்தர ராமசாமியை அழைத்துச் சிறந்த கதையைத் தேர்ந்தெடுக்கச் சொல்லி மிக நல்ல காரியம் செய்திருக்கிறது. சுத்தமான அமைப்பு, எளிமை, புதிய தேவையான அடிக்குறிப்புகள், மொத்தத்தில் பிழையற்ற அச்சு எல்லாம் 'கனவுக் கதை'த் தொகுப்பின் சிறப்பு அம்சங்கள். மற்றொரு குறிப்பிடப் படவேண்டிய அம்சம், சென்ற ஆண்டுத் தொகுப்பைவிட எண்ணிக்கையில் தரமான கதைகளைக் கொண்டிருப்பது.

இத்தொகுப்பில் இலக்கிய பூர்வமான கதைகளும் மற்ற எழுத்துக் குப்பைகளும் தெளிவாக இரண்டு பிரிவுகளாகத் தெரிகின்றன. மிகச் சிறந்த கதைகள்: கனவுக் கதை, காத்திருத்தல். நல்ல கதைகள் மூன்று: கோணல் வடிவங்கள், பாயசம், அம்மா ஒரு கொலை செய்தாள். சுத்தமாக எழுதப்பட்டிருக்கிறது என்ற ஒரே தகுதியில் மன்னிப்பா, கேட்கணுமா.. வையும் தனியாகப் பிரித்து எடுத்து விடலாம். மற்ற ஆறும் மோசமான கதைகள். சார்வாகனின் கனவுக்கதை மிகச் சிறந்ததாகத் தேர்ந்தெடுக்கப் பட்டதைக் குறித்து விவாதம் தேவையில்லை, அதற்கும் காத்திருத்தலுக்கும் ஒப்புமை ஒருவிதத்தில் அர்த்தமற்றது. இரண்டும் தனிப்பிரிவுகளைச் சேர்ந்தவை, உள்ளடக்கத்திலும், வெளிப்பாடிலும். கனவுக் கதை நையாண்டி மிகுந்து யதார்த்தத்தைச் சொல்கிறது. காத்திருத்தல் அழுத்தமாக, மனதைச் சஞ்சலப்படுத்தும் வகையில் யதார்த்தத்தைச் சொல்கிறது. கனவுக் கதையில் ஆரோக்யமான Skepticism கச்சிதமான தேர்வுடனும், பகுத்து உணர்தலின் மூலமும் வெளிப்பட்டிருக்கிறது. குகைக்கால மனிதனின் திகில் அச்சூழலின் பயங்கரத்தன்மையோடு நோடியாகக் குழப்பம் இல்லாது காத்திருத்தலில் வெளிப்பட்டிருக்கிறது படைப்பியலுக்குத் தேவையான நிச்சயமும். கலையுணர்வும் இந்த இரண்டு கதைகளின் வெற்றிக்குக் காரணம். எழுத்து, இலக்கியம் வெறும் நிகழ்ச்சிகளைப் பற்றிய கவனம் மட்டுமல்ல என்பதை இவை நன்ருகக் காட்டியிருக்கின்றன.

மற்ற மூன்று நல்ல கதைகளிலும் மிகவும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை என்று எனக்குப் படுகிறது. ஜானகிராமனின் திறனைப்பற்றிச் சந்தேகமே கிடையாது. மற்ற இருவரும் நல்ல திறனையும், முயற்சியையும், அடிப்படை பிரக்ஞையையும் காட்டியிருக்கிருர்கள்.

கடைசியாகச் சொல்லப்பட்ட ஆறு கதைகளில் நமக்குக் கிடைப்பது மெலோட்ராமா, அசட்டுத்தனம், பாசாங்கு, குழப்பம் வெறும் சம்பவங்களை நம்பினலே இலக்கியம் தோன்றிவிடும் என்ற அறியாமையே இவற்றில் தெரிகிறது. அனுபவம், அடிப்படைக் கலையுணர்வு, பகுத்து அறிதல் — இவையெல்லாம் இந்த எழுத்தாளர்களுக்குத் தேவையில்லை.

இக்கதைகள் பத்திரிகைகளில் வருவதே வீண் என்று இருக்கும்போது, மறுபடியும் அவற்றினல் நல்ல தாள்களும், பணமும் வீணுயிருப்பது வருத்தத்திற்குரியது. ''யாரோ ஒருவருக்கு'' இவை சிறந்த கதைகளாகப் பட்டிருக்கின்றன என்ற ஒரே காரணத்தால் அவை மீண்டும் தொகுப்பில் இடம்பெற வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டிருக்கலாம். யார் இந்த ''யாரோ ஒருவர்''? இலக்கியச் சிந்தனை அமைப்பாளர்கள் 'யாரோ ஒருவர்' என்று சொல்லியிருப்பது குழப்பமாக இருக்கிறது. கடைசியில் சொன்ன கதைகளைக் குறித்தே அவர்கள் ''யாரோ ஒருவரை''ப் பற்றிப் பேசியிருக்கிருர்கள் என்ற நல்ல நம்பிக்கையில் நம் எடுத்துக் கொள்வோம். அப்படியானல் இலக்கியச் சிந்தனை இம்மாதிரி பேர்வழிகளைத் தவிர்க்க வேண்டும். இவர்களால் ஒரு விதப்பயனும் கிடையாது. ஏனென்ருல் அடிப்படை இலக்கிய மனப்பாங்கோ, பார்வையோ கிடையாது. இவர்கள் நான்கைந்து சம்பவங்களை, அசட்டுத்தனமாக எழுதுவதே இலக்கியம் என்று எண்ணுபவர்கள். அதனல்தான் 'வைதீகக் கம்யூனிஸ்டான' சிதம்பர ரகுநாதனல் சுகிசுப்பிரமணியத்தின் கதையைத் தேர்ந்தெடுக்க முடிந்தது.

—ராமகிருஷ்ணன்.

---

* கனவுக் கதை
(சிறுகதைத் தொகுப்பு)
விலை : ரூ. 3.
வெளியீடு : இலக்கியச்சிந்தனை
11, நான்காவது குறுக்குத் தெரு,
கிழக்கு ஷெனய் நகர். சென்னை-30.

# தனி ஊசல்

கல்யாண்ஜி

ஆபீஸிலிருந்து வீட்டிற்கு வரும்வரை அவன் மனது நன்றாகத்தானிருந்தது. மழை வருகிறாற்போல கும்மென்று, வெயிலே இல்லாமல் இருந்த சாலையில், சைக்கிளை மிதிக்கும்போது இறக்கை முளைத்தது. மாட்னி-ஷோ கூட்டம் தியேட்டரிலிருந்து வெளியேறி ரஸ்தாவில் பல வண்ணங்களில் ஆணும் பெண்ணுமாய்ப் பிரவகிக்கையில் — அந்த மூக்குத்திப் பெண்—ரொம்ப சந்தோஷமாக இருந்தது. கூட்டங்களைப் பார்க்கும் போதெல்லாம் இப்போது அவனுக்கு அப்படியொரு சந்தோஷம். பெட்ரோல் பங்குகளோ, ஆட்டோ மொபைல் ஒர்க் ஷாப்புகளோ இன்னும் விழுங்காமல், நடுவில் சந்துபோலக் கிடக்கும் வயல் வெளியை — அதன் வரப்பில் வந்து கொண்டிருந்த ஜவ்வு மிட்டாய்க் கலர்ப் புடவைக்காரி, அவளின் கலைந்ததலைக் கணவன் —அவன் நின்று ரசித்தான். நின்று என்றால் சைக்கிளைக் கொஞ்சம் ஸ்லோ பணணி. திடீரென்று கொஞ்சம் போனதும், சைக்கிளில் ஸ்பீடாகப் போகத் தோன்றியது. காரணமே யில்லை.

'வழியில் அன்றைக்கு ஒரு நாள் குழாயடியில் நின்றுகொண்டிருந்த பெண் இன்றைக்கும் நிற்பாளா?' என்று நினைத்தான். இன்று கூட்டம் நிறைய. நல்ல பிள்ளையாய் அந்தப் பக்கம் திரும்பவேயில்லை. யாருமே தெரிந்தவர் வராத, யாருமே கூப்பிடாத பின் பக்கத்தைத் திரும்பிப் பார்த்தபடி ஓட்டி அந்த இடத்தைக் கடந்தான். பெல் அடித்தான். இரண்டு தெருக்களைக் கடந்து மறுபடியும் ஒரு வீதிக்கு வந்து, தான் இருக்கிற சந்திற்குள் நுழைந்தான். நர்சரி ஸ்கூல் வண்டியிலிருந்து இறங்கி வருகிற பாப்பாவை மோதுவதுபோல் விளையாட்டுக் காட்டி, வீட்டின் பக்கம் இறங்கினான். அடுத்த காம்பவுண்ட் பாட்டி 'இன்னும் குழாயிலே தண்ணி வரலே. தவலையைப் போட்டுட்டுக் காத்துக்கிட்டிருக்கிறோம்' என்று சிரித்தாள். 'இதைச் சொல்கையில் என்ன சிரிப்பு?' —உயரமான நடையில் சைக்கிளைத் தூக்கி ஏற்றி—'இந்தத் தெருவில் அதுயார் புதுசா'— உள்ளே போனான்.

அப்போதுதான் லெட்டர்கள் பற்றிய நினைவு வந்தது. 'இன்றைக்குப் பெங்களூரில் இருந்து லெட்டர் வந்திருக்கும். சிவசு கார்டாவது போட்டிருப்பான். ஒருவேளை சீதா லெட்டர் எழுதியிருக்குமோ? அது எழுதியிருந்தா எவ்வளவு நல்லாயிருக்கும்! வீட்டுக்குள்ளே நுழைஞ்சதும் 'லெட்டர் இருக்கா?' ன்னு கேட்கக் கூடாது. கேட்டால் இருக்காது. ரேடியோ ஸ்டாண்டை தானே தேடிப் போச்சு!

சைக்கிளை நிறுத்திப் பூட்டினான். வீட்டில் யாருமே இல்லை. துடைத்து வைத்திருந்தது. பாட்டி மாத்திரம் மடக்கி உட்கார்ந்து நடுக் கட்டில் தலையைச் சிக்கெடுததுக் கொண்டிருந்தாள். கால் விரலுக்குள் சிக்குப் பந்தாக நரை முடி. 'அது விரல்களின் கவ்வலிலிருந்து நழுவிக் காற்றில் உருண்டு வெயிலில் புரள்வதைப் பார்க்க வேண்டும்'. வாசல் திரை காற்றில் விசிறி பாய் அகலம் நிழலைச் சுருட்டி வீசி ஒதுங்கியது. அவன் ரேடியோ ஸ்டாண்டை விரலால் பார்த்தபடியே கேட்டான், கேட்காமல் இருக்க முடியாமல், 'லெட்டர் ஏதாவது உண்டா?'

பாட்டி நிமிர்ந்து பார்த்தாள். அவள் நினைவுகள் அறுந்திருக்கும். 'வா. அப்படி ஏதும் வந்ததாத் தெரியலையே' என்றாள். இவனுக்கு உள்ளே எல்லாம் முறிந்து, எல்லாம் இருண்டு, உணர்வின் மென்மைகள் கலவரமடைந்தன. வீடு, சாயங்காலப் பொழுது எல்லாமே சூனியம். 'அம்மா, தம்பி, தங்கச்சி யாரையும் காணோமே, எங்கே?' கேட்க நினைத்தான். கேட்கவில்லை. 'ஏன் கேட்கணும்?' என்ற அலுப்பு. 'எதுக்கு ஆபீஸில் சீக்கிரம் வேலைமுடிஞ்சுது? இராத்திரித் தூங்குகிறவரை இனிமேல் என்ன செய்ய?'...

''காப்பி போடட்டுமா?''

''வேண்டாம்''

''ஏன், வெளியே குடிச்சாச்சா?''

''வேண்டாம்னு விடேன். இதானே ஒங்கிட்ட தொந்தரவு'' பாட்டியிடம் கோபித்து முகத்தைச் சிக்கலாக்கிக் கொண்டு லெதர் பாக்கை வீசினான். ஸ்டீல் பீரோவின் நெற்றியில் போய்ச் சப்பென்று விழுந்தது அது.

முகம் கழுவினான்,

## உரிப்பு!

தோலை உரித்தேன்,
பழச்சுளை தெரிந்தது,
சுவைக்க ஆவல்
'சுருக்'கென் றெழுந்தது!

ஆடை உரித்தேன்,
அங்கம் தெரிந்தது,
அணைத்துப் புரள
வேட்கை எரிந்தது!

உண்மை உரித்தேன்,
பிரச்சினை தெரிந்தது.
முகத்தைச் சுருக்கி
முக்காடாய் எங்கோ
ஒதுங்கி நெஞ்சம்
பதுங்க நினைத்தது!

—தமிழழகன்

---

"வாட்சை வெண்ணுக் கழற்றிக் கொடுத்துட்டுக் கழுவேன்" என்ற பாட்டியைக் குதறிவிடுவதுபோல் பார்த்துவிட்டு மறுபடியும் கையில் ஏந்திய தண்ணீரில் முகத்தைப் புதைத்தான். கண்ணாடி முன்னே தலை வார வரும்போது, பாட்டி மீண்டும் கேட்டாள்.

'அப்போ, காப்பி வேண்டாம்னு சொல்லுதே'.

'அதான், அப்பவே சொன்னனே. ஏழு தடவை சொல்லனுமாக்கும்' எரிந்து விழுந்தான். அவன் சீப்பை வேறு காணவில்லை. காணோம். தேடுகிற அவசரத்தில், குங்குமச் சிமிழ் உருண்டு கீழே விழுந்து சிதறி, நாலைந்து துள்ளலில், தரையில் பூத்தது. அதை எடுக்கக்கூட பிரயாசைப்படாமல், பாட்டி பார்க்கிறாளா என்று பார்க்க, இதுவரை இங்கேயே பார்த்துக் கொண்டிருந்தவள் அங்கே திரும்பினாள். சீப்பைக் கண்டு பிடித்து 'இதை யாரு அங்கே கொண்டு வச்சது?' என்ற முனகலுடன் மறுபடியும் தலை வார, தலை அவனுக்குத் திருப்தியாகப் படியவில்லை. திரும்பவும், திரும்பவும், திரும்பவும், இன்னொருமுறை தலையில் தண்ணீரைத் தெளித்து விரல்களால் கோதி 'இப்படித் தலையிலே தண்ணியை வச்சால் சளிகிளிண்ணு பிடிச்சா...?'— 'போதும் போதும் ஒண்ணும் வராது. நீ பேசாம இரு'—மறுபடியும் வாரினான். கண்ணாடியில் டூத் பேஸ்ட் வெள்ளை நட்சத்திரங்களாய்ச் சிதறியிருந்தன. ஒவ்வொரு கடுகு வெள்ளைக்கும் நிழலாகப் பிம்பம் வேறு. அவனுக்குத் தங்கைமேலே எரிச்சல் வந்தது. 'அதென்ன, கண்ணாடி முன்னாலே நின்னு பிரஷ் பண்ணாத்தான் பல்லு வெள்ளை ஆகுமோ. இல்லாவிட்டாலும் இவ பல்லு ரொம்ப அழகுதான். பெரிய்ய... கே. ஆர். விஜயா' — கண்ணாடியை உள்ளங்கையால் தேய்த்தான். பட்டை பட்டையாய்க் கண்ணாடி மேலும் மங்கியது. ஒவ்வொரு மங்கலிலும் மெலிதாகப் பரவின நீலமும் மஞ்சளும். அதை அப்படியே தலைக்கு மேலே தூக்கிக் கலீர் என்று உடைக்கவேண்டும்போல ஒரு வெறி வந்தது. இதுதான் கடைசிதடவை, இதுதான் கடைசி தடவை என்ற தீர்மானங்களை அழித்து அழித்து மனதுள் எழுதினான். எழுதியதை அழிக்க மீண்டும் வாரினான். கண்ணாடி முன்னால் நிற்கநிற்கத் தான் அழகாயில்லை. என்கிற வருத்தம் கூடிக்கொண்டே போனது. 'வீட்டைவிட்டு எங்கேயாவது உடனே போகணும். எங்கே போக? யார் இருக்கிறார்கள் எனக்கு? இந்தத் தெருவில எங்கிட்ட நின்னு பேசுறதுக்குக்கூட எனக்கு ப்ரண்ட்ஸ் இல்லை. ஏன் இந்த மாதிரி ஆகிப்போச்சு?'— நினைக்க நினைக்கத்தான் ரொம்பத் தனித்துப் போன உணர்வு கிளர்ந்து அடைத்தது. எல்லோரும் இருக்கிறது மாதிரி, எல்லோர்க்கும் இருக்கிறது மாதிரி, ஏன் நானில்லை, ஏன் எனக்கில்லை? இருக்கிறது ஒரே ஒரு ப்ரண்ட். அவனைப் பார்க்க, மூணாவது தெருவைத் தேடிப் போகணும்'— இப்போதெல்லாம் அவனைப் பார்க்கப் போவதுகூட பிடிக்கவில்லை. பார்க்கவேண்டும் என்கிற பசி இல்லை.

அவன் புதிதாக யாரையோ காதலிக்க ஆரம்பித்திருக்கிறான். இவன் போனால் அவளைப் பற்றிப் பேசுகிறான். அவனுக்கு வருகிற காதல் கடிதங்களைக் காட்டுகிறான். படிப்பதை தவிர்க்க முடியவில்லை. படித்த முதல் காதல் கடிதம் அதுதான். அந்தப் பெண்ணையும் அதன் வயதையும் நினைத்துப் பார்க்கையில், இவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. எழுதின ஒவ்வொரு வார்த்தையிலும் ஒரு ஆசை, ஒரு உரிமை, ஒரு 'நான் உனக்கு—நீ எனக்கு, உறுதிஇருந்தது. கணவன், மனைவி, குழந்தை இன்று, நேற்று, நாளை, பிறவி, பாக்யம் என்ற வார்த்தைகளோடு சம்பந்தப்பட்ட தூரத்தின் விசாலம் தான் நெருங்க முடியாதது எனப் பயந்தான். ஒரு கடிதத்தில் 'சிகரெட் குடிக்கிறதை விட்டுவிடவேண்டும்' என்ற குறிப்பை அன்புக் கட்டளை என்ற வார்த்தையில் பொதிந்து எழுதியிருக்கும். இன்னொரு கடிதத்தில்—'ராத்திரி ஏன் ரொம்ப நேரம் தூங்காம உடம்பைக் கெடுத்துக்கணும்?' இன்னொரு கடிதத்தில் வீபூதிப் பிரசாதம்.

எல்லாவற்றையும் படித்துவிட்டு மௌன மாகச் சாகத் தோன்றும் இவனுக்கு.— 'தான் யாரிடத்திலும் தன்ஒரேப்ரண்ட் என்று சொல் லிக் கொள்கிற அவனிடம் கூட உண்மையா யில்லை. சொல்லாமல் விட்டது, சொல்லாமல் ஒளித்தது. கேட்காமல் அலட்சியப் படுத்தி யது, கேட்டு வருத்தப் படுத்தியது—என்று எல்லாமும் சேர்ந்து தனக்கு என்று அவனிடம் ஒரு ஸ்தாபிதமான தொடர்பையோ, உரிமை யையோ இதுவரை ஏற்படுத்தாமல் போய் விட்டது. 'டேய், சிகரெட் இப்படிப் பிடிச்சா உடம்பு என்னத்துக்காகும்? என்று ஒரு தடவை கூட அவனிடம் சொன்னதில்லை. சே. இவ்வளவுதான் நானு'— அவனுக்கு நினைக்க நினைக்கத் தனக்குத் தானே கேவல மாகப்பட்டது. தன்னுடைய ஒரே ஒரு பிடிப் பும் ஆதரவும் கை நழுவிப் போனது போல...

"அப்பவே வந்துட்டியா?" தங்கைவீட்டுக் குள் நுழைந்த கையோடு ரேடியோவைப் போட்டாள். அவளைச் சத்தம் போடப் பதுங் கினான். அதற்குள் ரேடியோவின் மேஜிக்—ஐ மலர்கிற அழகை ஒரு விநாடி ரசித்தான். நாற்றுப் பச்சையாய், ஒற்றைப் புல்லாய் அது நடுங்கிக் கொண்டிருந்தது. அவளைக்கோபிக்க வேண்டுமென்ற மனநிலை குளிர்ந்து விட்டிருந் தது. 'சில சமயம் இவள் ரொம்ப அழகாய் இருக்கிறாள், ரொம்ப அழகாய்ச் சிரிக்கிறாள்.' அவனால் சத்தம் போட முடியவில்லை.

"அம்மாவை எங்க?"

"செவ்வாய்க்கிழமையில்லியா. குமரீஸ் வரி கோயிலுக்குப் போயிருப்பா"

இவனுக்குத் திடீரென்று அவன் தங்கை யுடன் ,உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்க வேண்டும் போல இருந்தது. தங்கைதான் என்றில்லை. யாராவது ஒரு வயதுப் பெண் ணுடன் உட்கார்ந்து சிரிக்கப் பேச வேண்டும் அல்லது சண்டை போட வேண்டும், சீண்டி விட்டு அழவைக்க வேண்டும் என்று தோன்றி யது. அவன் ப்ரண்டோட காதலியுடன் தான் மாத்திரம் தனியாய்—நிச்சயம் அந்தப் பய' இருக்கக்கூடாது— இருந்து பேச வேண்டும்' என்று மனம் அலைந்தது. 'எங்கிட்டே யாரும் முகம் கொடுத்துக் கூட பேச மாட்டாங்க. எனக்குச் சிரிச்சுப் பேசவே தெரியாது. அவ கூட நான் அதைப் பேச முடியும்? இதிலே வேறே என்னைக் காதலிக்கச் சொல்லுதான்'

...ஒருநாள் ப்ரண்ட் கூடப் பேசிக் கொண்டிருக்கையில், திடீரென்று, 'Why don't you love?' என்றுகேட்டான்; சிரித்துக் கொண்டே; சாதாரணமாகத்தான். இவன் திடுக்கிட்டுச் சுருண்டு மனதுள் குனிந்தான். 'என்ன கிண்டலா?' என்று கோபமாய்க் கேட் டான். பேசாமல் புறப்பட்டு வந்துவிட்டான். வீட்டிற்கு வந்து, டைரியில் 'Why don't you love? ' என்று பக்கம் முழுவதும் எழுதினான். அழுதான். யாருக்காவது லெட்டர் எழுத வேண்டும்போல் இருந்தது. யாராவது ஒரு பெண்ணுக்கு. எல்லோரையும்விட சீதாவுக்கு எழுதுவதுதான் அப்போது சுகமாக இருந் தது. 'அது பதிலே எழுதிறதில்லை. நான் மறுபடி மறுபடி ஏன் இப்படி எழுதிக்கிட்டே இருக்கிறேன்?' என்று எழுதியதைப் பாதியில் நிறுத்தினான். 'அவளுடைய பழைய கடிதங் களையெல்லாம் படித்தால் என்ன?'... 'இவ விஷயத்திலேயும் அப்படித்தான். என்ப்ரண்ட் இவன் என்று நான் இன்ட்ரட்யூஸ் பண்ணி வைக்க, அதுக்கப்புறம் என்னைவிட அவங் கிட்டே பிரியம் ஜாஸ்தியாப் போச்சு, என்னை விட அவனுக்குக் கூடுதல் லெட்டர். நான் கேட்டும் கொடுக்காத போட்டோவை, அவ னுக்கு அவளாவே. ஏன்? என்னைமாத்திரம் ஏன் இடையிலே விட்டுடறாங்க? ஆணும் அழகாயிருக்கணும்; அட்லீஸ்ட் இந்தவயசுலே யாவது. சிரிக்கனும். நிறுத்தாமப் பேசணும். என்னாலை இதெல்லாம் முடியாது... ...

"காப்பி வேண்டாம்னியாம்"

---


# கசடதபற

(ஒரு வல்லின மாத ஏடு)

தனி இதழ் : 30 காசு

ஆண்டுச் சந்தா : ரூ. 3/-

சந்தா அனுப்பும் அன்பர்கள் தங்க ளுடைய முகவரியைத் தெளிவாகக் குறிப்பிடவும். ஒவ்வொரு மாதமும் 7ந் தேதிக்குள் 'கசடதபற' இதழ் சந்தா தாரர்களுக்குக் கிடைக்காவிட்டால் உடன் தெரிவிக்கவும். கதை, கட்டுரை, கவிதைகள் அனுப்புகிறவர்கள் பிர சுரிக்க இயலாதவற்றைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலையுடன் அனுப்பிவைக்க வேண்டும்.

ஆசிரியர்: 'கசடதபற'

1 தேவடி தெரு

சென்னை-4

"ஆமாம்"

"ஏன்?"

"என்னமோ, வேண்டாம்"

"அதெல்லாமில்லே. கொஞ்சம் இரு. போட்டுத்தாரேன். குடிச்சிட்டு வெளியிலே போலாம்"—தங்கை பேச்சைத் தட்டமுடிய வில்லே. கொண்டுவரச் சொல்லிவிட்டு, அந்நியன் ஒருவனைப் போல, தொங்கிக் கொண்டிருந்த புகைப்படங்களை ஒவ்வொன்ருகப் பார்த்தான். ஸ்விட்ச் போர்டில் செருகியிருந்த இரண்டு மூன்று கல்யாணக் காகிதங்களை—ஒன்று கீழேவிழ, அதைக் குனிந்து பொறுக்கி எடுத்தான். "அப்பாவுக்கு ரெண்டு மூணு இன்விடேஷன் வந்திருக்கே" பிரித்து வாசித்தான். 'எம் பக்கத்திலே வந்துதான் சத்தமாப் படியேன். யார் யாருக்குண்ணு நானும் தெரிஞ்சுக் கிடட்டும்' என்ற பாட்டிக்குப் படித்துக் காட்டினன். "இது யார் தெரியுமா' என்று ஆரம்பித்து ஒரு மாப்பிள்ளைக்குத் தகப்பனர், தாத்தா, அவர் ஊர் பேர் என்று பழைய அழியாத சித்திரங்களைப் புரட்டினள். ஒவ்வொரு முறை இப்படி ரொம்ப வருஷங்களுக்குப் பின்னல் அவள் போய் உட்கார நதுகொண்டு பாட்டி பேசுகையில், எல்லாவற்றிற்கும் குறிப்பெடுத்து வைக்கவேண்டும் என்று நினைப்பான். இப்போதும் நினைத்தான. 'இதுக்கெல்லாம் டைரியில் இருக்கிற ஒரு பக்கம் போதாது. ஒரு நோட்டே வேணும்' பழசைப் பற்றிப் பாட்டி அப்படிப் பேசுவாள. பேச்சு கண்ணி கண்ணியாய்த்தாவும். நீளும். எல்லாவற்றையும் பேசிவிட்டு— "எட்டுக்கும் நான் தான், எழவுக்கும் நான்தான்'னு என்னைத் தான் இப்படிக் கடேசிவரை உக்கார வச்சுட்டான்" என்று மூச்சுவிடுவாள். அதற்கப்புறம் அன்று முழுவதும் பேச்சே இருக்காது. சாப்பாடு கொள்ளாது. படுத்துவிடுவாள். கொத்துக் கொத்தாய்க் கண்ணீர் வடியும்.

"எதுக்கண்ணு பழசெல்லாம்?" காப்பியை கொடுத்தபடியே அவனைச் சாடையாய் விலக்கினள் தங்கை. முன்னுதடுகளால் ஒரு மடக்கு காப்பியை உறிஞ்சியவாறு எழுந்து பாட்டியை விட்டு நகர்ந்து முன்கட்டிற்குப் போனன். 'இனிமேலும் இருக்க முடியாது. வெளியில் போய்த்தான் ஆகணும்' சட்டையைப் போட்ட படி வெளியே புறப்பட்டான். நடைவரை போனவன் ஏதோ காரியமாக வந்த பாவனையில் கண்ணடியைப் பார்த்துவிட்டு, கர்ச்சிப் ஏதாவது புதுசா இருக்குதா? இது ஒரே அழுக்கு. பரவால்லே, இருக்கட்டும்' என்று வெளியே போனன். "எங்கே மூணந்தெருவுக்கா" என்று தங்கை கேட்டதற்கு, 'ஏன்? நான் வெளியே புறப்பட்டாலே அங்கேதானு? வேறே இடமே இல்லேண்ணு நினைப்பா?' என்று வெளிறின சிரிப்பில் கேட்டுவிட்டு நடையைவிட்டு ரோட்டில் இறங்கினன்.

"அவளைப் பார்க்கப் போறதா, வேண்டாமா? போகாமல் இருக்கமுடியுமா? இருந்து தான் பார்க்கலாமே. அப்புறம் வேறெங்கே போக?" திசை புரியாதது போல் ரொம்ப நேரம் நின்றான். "கன காம்பரம், மல்லியப்..., குப்பைத் தொட்டியில் புகைகிற சாம்பல், முன் கால்கள் கட்டுப் போடப்பட்டுத் தாவித்தாவிப் போகிற சடைக்கழுதை, ரோட்டோரத்தில் குழந்தையை உட்காரவைத்துவிட்டுப் போகிற பெண்ணின் ப்ளாஸ்டிக் வாளியிலிருந்து சிந்திக்கொண்டே போகிற தண்ணீர், மரப்பொடி மூடைகளேற்றிய வண்டியில் ஒரு சாக்கைப் பிதுக்கி உள்ளங்கையில் வாங்கிச் சோதித்து விட்டுச் சொல்கிற—'ஈரமா இருக்கே'......

அவன் எல்லாவற்றிலும் அமிழ்ந்து நின்ருன். மனதின் சொல் எதையோ அங்கீகரிப்பதுபோல், தலையை ஒருமுறை தீர்மானமாக அசைத்துவிட்டுச் சடாரென்று வேகமாக நடக்க ஆரம்பித்தான்.

அவன் ப்ரண்ட் வீட்டிற்கும் அப்படித் தான் போகவேண்டும். ●

---

## பாலும் பழமும்

நியதியில்

பழம் சுவைத்து பாலருந்துவோர்

கேட்கையில், ஏன்

"பாலும் பழமும்" என்கிருர் என
நான்

சிந்தித்துப் பார்க்கையில்

தோன்றிற்று,

"மங்கையர் கொங்கையில்

பால் தேடிச் சுவைத்ததாலோ"

—மதுசூதன்

# அங்கிள்*

''அங்கிள்'' என்கிற சிறுகதைத் தொகுப்பின் ஆசிரியர் பிரகாஷ், 'மஹாபாரதத்தைப் படித்த பின்பும், பைபிளைப் படித்த பின்னரும், திருக்குறளைப் படித்த பின்னரும் எழுத நமக்கு ஏதாவது மிஞ்சியிருக்கிறதா' என்று ஆச்சரியப்பட்டு நிற்பவர். 'இலக்கணக் கொல்லர்களும், விமர்சகக் கொத்தர்களும், க்ரிடிக் தச்சர்களும் கூட ஓலமிட்டாலும் புதுசு ஒன்றுமே கிடையாது; எல்லாம் பழசுதான்' என்று அடித்துச் சொல்கிறவர். 'எல்லாக்கலைகளுமே ஒருமாதிரி பலவீனத்தால் தோன்றுகிற சலனங்கள்தான்' என்று அவர் ஆசான் சொல்லிக் கொடுத்த விஷயம் உண்மையோ என்னவோ என்று ஐயப்பட்டாலும் அவர் ஒரு 'பல வீனமான பாத்திரம்தான்' என்று ஒப்புக் கொள்கிறவர். வீட்டில் 'பெரிய புளுகன்' என்ற பட்டம் பெற்றுவிட்ட அவருக்குச் சிறு வயதுமுதலே சுற்றியிருக்கும் கூட்டத்திற்குக் கதை சொல்லும் பழக்கம் உண்டு. எழுதுகிறவனுக்கு என்ன பலவீனம் உண்டோ அதே பலவீனம் படிக்கிறவனுக்கும் வேண்டும் என்று எதிர் பார்க்கிறவர். (பிரகாஷின் கதைகளைப் படிப்பதற்கு முன்னால் அவருடைய சீடன் தான் என்று தீட்சை பெறவேண்டும் போல இருக்கிறது.) அவர் சொல்கிற இந்தப் பலவீனத்தைப் புரிந்து கொள்ளாமல் இலக்கியத்தில் 'ஆரோக்கியம்' 'எஃபக்ட்' முதலியவைகளைத் தேடுகிறவர்களை எண்ணிப் பரிதாபப் படுகிறவர். அவருடைய கதைகளைப்பெற்றுக் கொண்டபின்னர் பண்டமாற்றாக நம்முடைய கதைகளைத் தரச் சொல்கிறார். நாம் கதை சொல்ல வேணடாம். அவருடைய கதைகளைப் பற்றிய அபிப்பிராயங்களை மட்டும் சொல்லுவோம். இப்படி அபிப்ராயம் சொல்லுவதற்கு ஒரு பலவீனம் வேண்டுமே! அது புதிதாகக் கதைக்கத் தெரியாத பலவீனமாக இருந்து விட்டுப் போகட்டும்.

இந்தத் தொகுப்பில் ஆறு கதைகள் இருக்கின்றன. குழந்தைத்தனமாகத் தன்னிடம் வந்து சேர்கின்ற வயசுப் பெண்ணை இயல்பிலேயே பெண்சபலம் மிகுந்த வயதானவன் சந்தர்ப்ப வசப்பட்டு தீண்டுதல், பருவ விழிப்பில் பெரியவர்கள் கண்மறைவில் தகாதது செய்கின்ற சிறிசுகள், பெண்மை தூக்கலாகத் தெரியும் ஓர் இரண்டுங் கெட்டான் இளைஞனின் அவஸ்தைகள், ஏழ்மைக் குடும்பத்தில் பிறந்து வயதானவனுக்கு 'வாக்கப்பட்டவள்' சிறு வயது முதலே தன்னைச் சுற்றிக் கொண்டிருந்தவனுக்கு ஒரு நாள் படுக்கையில் இடங் கொடுத்தல் ஆகியவைகள் கதைகளின் விஷயங்கள். பிரகாஷ் தான், புதிதாகச் சொல்ல எதுவுமில்லை என்று சொல்லிவிட்டாரே! விட்டு விடுவோம்.

''சொன்ன முறையாலும் காலத்தாலும் வடிவத்தாலும் வேறுபாடுகள் உண்டாகியிருக்கலாம் அதுவும் இயற்கையானவை மட்டுமே வாழ முடிந்தன. வடிவம் எல்லாமே வசதிக்காக அமைக்கப்பட்டுக் கொண்டவைதான். வசதிதான வடிவம்.''

பிரகாஷ், கதைகளை ஜானகிராமன் மாதிரி சொல்லியிருக்கிறார். குறிப்பாக,இயற்கையைக் கதைமாந்தர்களின் மனநிலையோடு இலக்கியப் படுத்துகின்ற முறையில் இவர் ஜானகிராமனை ஒத்திருக்கிறார். பொருத்தமாக இயற்கையைத் துணைக்கு அழைத்துக் கதையில் ஒரு mood'ஐ உண்டு பண்ணுவது ஜானகிராமனின் சிறப்பு. பிரகாஷின் கதைகளிலும் இந்த அம்சம் காணப்படுகிறது.

''தனியாக வாலாட்டிக் குருவி கரைகிறது''

''பூமியே வறந்தரப்பிரதேசமாகி விட்டதா? வெயில் சுள்ளென்று உறைத்தது.''

''கிணற்றோரம் வலியன்குருவி சிடுசிடுத்தது''

''சாக்குருவி ஓலமிடவில்லை. ஆந்தைகளும் அலறவில்லை.''— இதை வெறும் imitation என்று சொல்லிவிடமுடியாது. சரியாகவே செய்திருக்கிறார். 'நாகம்' என்கிற கதையின் விஷய அம்சம்கூட ஜானகிராமன் வழக்கமாகக் கையாளுகின்ற ஒன்று தான். நாகத்தின் பேச்சு நடவடிக்கைகள் எல்லாமே ஜானகிராமனின் பல சிறுகதைகளிலும் 'அம்மாவந்தாள்' நாவலிலும் வருகின்ற 'நெகு நெகு' பெண்பாத்திரத்தை ஞாபகப் படுத்துகின்றன.

---

* 'அங்கிள்'
ஆசிரியர் : பிரகாஷ்
விலை ரூ 2.50
பிரசுரம் : லெட்சுமி புத்தக நிலையம்
50. சிவராயர் தோட்டம், முதல் தெரு,
மானம்புச்சாவடி — தஞ்சாவூர்.

**BALANCE**

காலக் கடலை நீந்திக் கடந்தேன்.
மீதி என்ன?
கஞ்சி போட்டு வயிற்றுத் துணியை
சலவை செய்தது தான்,
போதாதா?

—சுந்தரவிசுவாமித்திரன்

---

பத்திரிகை தர்மத்திற்கு வளைந்து கொடுத்து ஒருகட்டத்தில் சுபாவமாக முடிய வேண்டிய கதையை மேலும் வளர்த்திக் கொண்டு போகிறார். பண்பாடு காக்கப்படுகிறது. தீயவை செய்கிறவர்கள் தண்டிக்கப் படுவார்கள் போன்ற நீதிபோதனைகள் செல்லுபடியாகின்றன.

"இந்தப் பிணைப்பில் அந்த வயசு செத்தது! இந்த அணைப்பில் 'அந்தசுகம்' செத்தது. இந்தமடியில் அந்த அமைதி அமர்ந்தது" என்கிற 'அங்கிள்' கதை முடிவும், "நாகப் பாம்பு ஒன்று மண்ணோடு மண்ணாய் நசுங்கிக் கிடந்தது. நாகம் செத்துக் கிடந்தாள்" என்கிற 'நாகம்' கதை முடிவும் இதைக் காட்டுகின்றன.

'அங்கிள்' கதையில் விடியாவின் தாய் சாளிப்பிள்ளையிடம் தன்குடும்பதைப் பற்றி எல்லாவற்றையும் ஒரே மூச்சில் சொல்கிறாள். இது சாளிப்பிள்ளைக்காகச் செய்யப்பட்ட காரியமாக இல்லாமல் வாசகர்களுக்கு அவள் குடும்பத்தைப்பற்றிச் சொல்லி விடவேண்டும் என்ற ஆசிரியரின் முனைப்பைக் காட்டுவதாக இருக்கிறது. மாறாக, விடியாவின் பேச்சு மூலமாக நமக்கு சுவாரஸ்யமாக அறிமுகமாகின்ற சாளிப்பிள்ளையின் மனைவி பற்றிய விவரங்களும், அதை ஒட்டிய விஷயங்களும் கதை ஓட்டத்தில் இயல்பாக வெளியாகின்றன.

"ஜானுப்பாட்டி அழுது கொண்டிருக்கிறாள்!" என்ற கதையில் (நாக்கில் ஜலம் ஊறக் கதைப்புத்தகங்களைத்தீண்டுகிறவர்கள் இந்தத்தலைப்பைப் பார்த்து விட்டுப் பக்கங்களைப் புரட்ட வேண்டாம். பாட்டி மூன்றாவது பக்கத்தில் தான் வருகிறாள். முதல் இரண்டு பக்கங்களில் குளித்து விட்டு வரும் குமரிப் பெண் கண்ணாடிமுன் நின்று கொண்டிருக்கிறாள்!) சொல்லப்பட்டிருக்கிற கள்ளத்தனம் இயல்பாக இருக்கிறது. விஷயம் தெரிந்தவுடன் பாட்டி செய்கின்ற பிராயச்சித்தமும் இயற்கையாக இருக்கிறது. ஜெயகாந்தன் 'பாட்டி' மாதிரியோ, சிவசங்கரியின் அத்தைக் கிழவி மாதிரியோ புரட்சிகள் ஏதும் செய்யவில்லை. தலைப்பை வைத்து இது 'ஆனந்த விகடனில்' வந்த கதையாக இருக்குமோ என்று ஊகித்து ஜெயகாந்தனைத் தொடர்ந்து சிவசங்கரி, சிவசங்கரியைத் தொடர்ந்து பிரகாஷ் புரட்சிப் பாட்டியை சிருஷ்டித்திருக்கிறாரோ என்று எண்ணி ஏமாந்தது உண்மைதான்.

'இருட்டின் நிறங்கள்' என்கிற கதை தன்மையில் சொல்லப்பட்டிருக்கிறது. ஜெயகாந்தன் இந்த முறையில் ஒருகதை, ("லவ்பண்ணுங்கோ சார்" என்கிற கதையாக இருக்கலாம்)சொல்லியிருக்கிறார். நா. பார்த்த சாரதி, "நான் ஒரு அரிஸ்டோக்ராட்" என்கிற கதையை இந்த மாதிரி எழுதியுள்ளார். வார்த்தைக்கு வார்த்தை சார் போட்டு இந்த மாதிரி கதை சொல்லுதல் மிகவும் சலிப்பூட்டுவதாக இருக்கிறது. பிரகாஷின் கதையைப் படித்ததும் மற்ற இருவரும் ஞாபகம் வந்ததிலிருந்து இந்த முறையில் தடுக்கி விழாத ஆசாமியே இல்லையோ என்று தோன்றுகிறது. ஒரு கால், இது வசதி கருதி அமைக்கப்பட்ட ஒரு பொதுவான கதை வடிவமோ என்னவோ! இந்தக் கதையில் வருகின்ற கல்லூரி இளைஞன் ஆண்களுக்கும் தோற்றத்தால் வேண்டியவனாக இருக்கிறான். ஒரு பெண்ணுக்கும் தேவையானவனாக இருக்கிறான். பெண்களால் கேலியும் செய்யப்படுகிறான். அவனைப் போலவே நாமும் குழம்புகிறோம்.

பிரகாஷ் கிட்டத்தட்ட எல்லாருடைய வாரிசாகவும் இருக்கத் திட்டமிட்டுக் கதைகள் எழுதியிருப்பார் போல இருக்கிறது. புராணங்களையும், வரலாறுகளையும் ஏதோ புதிதாக interpret பண்ணிக் கதை எழுதுகின்ற வழக்கம் தமிழில் இருந்து வருகிறது. புதுமைப்பித்தன் 'சாப விமோசனம்' எழுதினார். பிரகாஷ் 'இராவண சீதை' என்று ஒரு கதை எழுதியுள்ளார். வேண்டுகிறவர்கள் இந்தக் கதையைப் படித்து பிரகாஷின் சாமர்த்தியத்தை மெச்சிக் கொள்ளுங்கள்!

பிரகாஷ் தன் 'இலக்கு அமைதி ஒன்றே' என்கிறார். இந்த க்கதைகளின பலனாக அவருக்கு எவ்வளவு அமைதி கிடைத்திருக்கும்? ஆனால், ஒன்று மட்டும் சொல்ல வேண்டும். சில பெரிய புள்ளிகள் பத்து வருடத்திற்கு முன்னால் எப்படிப் பொங்கிக் கொதித்து நரம்புத்தளர்ச்சியடைந்து கதைகள் எழுதினார்களோ அப்படியேதான் இப்பவும் எழுதுகிறார்கள். ஆனால் பிரகாஷ் பல இடங்களில் முதிர்ச்சியோடும் நாசூக்கோடும் எழுதியுள்ளார்.

—நா. ஜெயராமன்

# வழி மயக்கம்

பாலகுமாரன்

அப்ப... நான் வரட்டுமா பிந்து...

அவன் கைகளிரண்டையும் நாற்காலிப் பிடிகளில் ஊன்றிக் கொண்டான். கால்கள் செருப்பைத் துழாவின. கண்கள் அவளில் நிலைத்தன.

வலது கையிலுள்ள வளையல்களை ஏற்றி இறக்கிக் கொண்டிருந்தவள் இவனைப் பார்த்தாள். கண்களை ஒருதரம் அழுந்த மூடித் திறந்து மெலிதாக இவனைப் பார்த்துச் சிரித்தாள். மீண்டும் குனிந்து முழங்கையில் ஊன்றியிருந்த வளையல்களைத் தளர விட்டாள்.

முடிஞ்சா... நாளைக்கும் வரேன்... இவன் இடது கால், செருப்புக்குள் நுழைந்து கொண்டது.

இருங்கோளேன்... என்ன அவசரம்... ஏதாவது வேலையிருக்கா... தலையில் முடிந்திருந்த ரிப்பனைச் சொடுக்கி இழுத்தாள். 'பம்'மென்று விடுதலையாகிச் சுருள் சுருளான கூந்தல் தோளில் படர்ந்தது.

புஸ்மாஸஅரி, புஸ்மாஸஅரி என்று இவன் மனது கூவிற்று. ஏதாவது ப்ரோக்ராம்னு சரி. ஒன்னுமில்லேங்கறபோது .. கொஞ்சம் இருந்து பேசிட்டு போகலாமில்லையா... நான் வற்புறுத்தலே... உங்களாலே...

OK... அவன் வார்த்தைக்குத் தேடும்முன் இவன் நாற்காலியில் அழுந்திச் சரிந்தான். இடது கால் செருப்புக்குள்ளேயே இருந்தது. வலது காலை விரைத்துத் தளர்த்தினான். பின் பக்கம் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டான். கழுத்துப் பட்டையில் வியர்வை கசகசத்தது. வெளி வெய்யிலின் பளீரைக் கண்களை மூடிக் கொண்ட பின்னரும் உணர முடிந்தது. கூந்தல் பம்மி அவள் தோளில் படர்ந்த மாதிரி தன் மேலும் குப்பென்று ஒரு குளிர் காற்று சரிய ஆசைப்பட்டான். ஹாலின் நடுவில் சுற்றிக் கொண்டிருந்த பானிலிருந்து லேசான காற்று வெப்பத்தோடு காலை மட்டும் நக்கிக் கொண்டிருந்தது.

இவன் கண்களைத் திறந்தான். இத்தனை நேரம் அவளோடு பேசிய பேச்சுக்களின் சாரம் மண்டைக்குள் கனத்தது. அதிகம் காட்டிக் கொண்டு விட்டோமோ என்ற கேள்வி நெஞ்சைக் குடைந்தது. அடிக்கடி இந்தத் தப்பைப்பண்ணி விடுவதற்காக இவன் வெட்கப்பட்டான். அப்படிச் செய்துவிட்டு வெட்கப்படுவதற்காகவும் வெட்கப்பட்டான். அந்த வெட்கததைப்போக்க வேண்டும் என்று ஆசைப்பட்டான்.

இவளுடைய அனுதாபம் எனக்குத் தேவையாய் இருக்கு. சுகமாய் இருக்கு இவளுடைய அனுதாபம் எனக்குத் தேவைப்படறதினலே, இவநட்பு தேவைபடறதினலே இவ அனுதாபத்துக்கு முயற்சிக்கிறேன். முடிவில்லாம என் மேல் இவ அனுதாபப்படனும்னு என்னைப்பத்தி முழுசும் சொல்லிடறேன். முடிவில்லாம அனுதாபம் கிடைக்குமோ. முடிவில்லாத பொருள்தான் எது இந்த ஒலகத்தில? எனக்குத் தெரிஞ்சு எதுவுமில்லே. இன்னும் கேட்டா, என்னைப் பொறுத்தவரையில் எல்லாம் முதலாகிறப் போவே முடிஞ்சு போறது. இவ நட்பும்... இப்படித்தான் போயிடுமோ... நோ. விடப்பாடாது. திரும்பி அதே தப்பைப் பண்ணப்படாது. இவ நட்பு எனக்கு வேணும். இல்லேன்னு முறிஞ்சு போய்டுவேன். இவ நட்பு எனக்கு வேணும்னு இவ கிட்டேயிருந்து நான் ஒரு அடி தள்ளியே நிக்கணும். என் மனசின் ஒரு ஓரத்தை ஒளிச்சே வச்சுக்கணம். என்னிக்குத்தான் கத்துக்கப்போறே அம்பி, இதையெல்லாம் என்னிக்குத்தான் கத்துக்கப்போறே. Come on Get up, விலக்கிண்டு வெளியே போடா, மனசுக்குள் உரக்கச் சொல்லிக் கொண்டான்.

கழுத்தைத் திருப்பி இவளைப் பார்க்கையில், அவள் இவனையே பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

முதுகை உந்தி நேராய் உட்கார்ந்து கொண்டான்.

அப்புறம்... வேறென்ன... ஒரு பெருமூச்சுடன் வார்த்தைகள் புரண்டு வந்தன. தன்னைப் பற்றிய பரிதாபம் முகத்தில் படர, கிராப்பை ஒதுக்கிக் கொண்டு, வேறென்ன இருக்கு... சொல்லுங்கோ.

அவள் கண்களின் ஓரம் ஈரம் பளபளத்துக் கொண்டிருந்தது. இமைகளின் படபடப்பை அடக்கி நிறுத்துவதன் மூலம் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முயற்சிப்பது தெரிந்தது.

உங்களை ஒண்ணு கேக்கறேன்... தப்பா நினைச்சுக்காதீங்கோ... உங்க எல்லா எழுத்

## வரையறை

ஜடமாய்த் தவம் புரிந்தும்

செத்தன—

சாகப் பயந்த கோயில் தீபங்கள்.

ஆடியுழைத்து

அலுத்துச் செத்தன

காற்றில் மலர்ந்தவை.

—கலாப்ரியா

---

திலேயும் நீங்க இருக்கேளா... நீங்க எழுதற தெல்லாம் உங்களைப் பத்திதானு— கடைசியா சொன்னேளே, அந்தக் கவிதை கண்ணைப் பிடுங்கும் ரத்தப் பூவே, உனக்குத் தந்தை நானடா மகனேன்னு... அதுலகூட நீங்க இருக்கேளா.

இந்தத் தடவை அவள் அனுதாபம் அவனுக்கு அன்னியமாய்ப் பட்டது... இல்லே, என்று சொல்ல வேண்டும் என்கிற முடிவு மனதுக்குள் ஏற்பட்டுவிட்டாலும், ஒருகணம் கண்ணைச் சுருக்கி யோசிப்பதுபோல் பாவனைச் செய்தான். பிறகு வெகு இயல்பாய் தோளை குலுக்கிக் கொண்டு சிரித்தான்.

நோ...யூ ஆர் ராங்... முழுக்க முழுக்க எல்லாமே தானய் தன் எழுத்தில் எவனும் இருக்கிறதில்லே. பிறத்தியார் விஷயத்தெ தனனுதா பாவிச்சிண்டு எழுதறதும் உண்டு... நீங்கக் கூடத்தான் ஒரு கதை ஆரம்பிச்சிருக்கேள்.. மதன் மாலாவை அணைத்துக் கொண்டான்னு...யாரந்த மதன் உங்களுக்குத் தெரியுமா...அந்த மாலா நீங்கதானேன்னு நான் கேட்டா...

சே... நா ஒண்ணும் அந்தமாலா இல்லே அது முழுக்கக் கதை. அசல் கதை, வெறும் கதை. அவள் வெட்கத்துடன் சிணுங்கினள்.

இவனுக்குச் சந்தோஷமாய் இருந்தது.

என்னுதும் அப்படித்தான் பாதி கதை, பாதிநிஜம். அதுல எதுநிஜம், எதுகதைன்னே எனக்குத் தெரியலே. எல்லாமே நிஜமா, எல்லாமே கதையாஇருக்கு. வரட்டுமா... I am tired...போய் கொஞ்சம் உடம்பச் சாய்க்கணும். நாளைக்குப் பாக்கலாம். வலது காலை மடக்க செருப்பை நாற்காலிக்கடியிலிருந்து இழுத்துக் காலில் மாட்டிக் கொண்டான். விரைப்பாய் எழுந்துச் சட்டையை உதறிக் கொண்டான். அவளும் எழுந்தாள்.

சிகெரெட் பெட்டி இங்கே இருக்கு. நாற்காலியின் பின்பக்கம் விழுந்து விட்டிருந்த பெட்டியைக் குனிந்து எடுத்தாள்.

'தீர்க்க சுமங்கிலி பவ'...இவன் மனசுக்குள் சொல்லிக் கொண்டான். வரட்டுமா. அவள் கண்களைச் சந்திக்காமல் சிகரெட்டை வாங்கிக் கொண்டான். சிகரெட்டைக் குறைச்சுக்கோங்கோ... பேசிண்டிருந்த ஒரு மணி நேரத்திலெ அஞ்சு பிடிச்சுட்டேள்...இது எதுல கொண்டுபோய் விடும் தெரியுமா? அவள் குரலின் தழ தழப்பு அவனுக்கு வேதனையாய் இருந்தது. கொஞ்ச கொஞ்சமா நிறுத்திடுங்கோளேன்...

ப்ச்ச்...அவள் சொல்லியே நான் நிறுத்தலே நீங்க சொல்லித்தான நிறுத்தப் போறேன். இது இல்லாம என்னல் முடியாது நாளைக்கு வரேன். புத்தகங்களை எடுத்துக் கொண்டு வாசலைத் தாண்டி வெய்யிலில் இறங்கினன். அவள் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

பை...

பை... சிரித்தபடி கையசைத்தாள். தோட்டத்தைக் கடந்து, கம்பிக் கதவைத் திறந்து தெருவில் நின்று மீண்டும் கதவை மூடுகையில் அவள் அங்கேயே நின்று மீண்டும் கதவை மூடுகையில் அவள் அங்கேயே நிற்பது தெரிந்த்து. கதவின் கொக்கியைப் பொருத்தியபடி மீண்டும் கையை அசைத்தான். பதிலுக்கு அவளும் வீசினள்.

வேஷ்டியின் நுனியைப் பிடித்துக் கொண்டு தெருவில் இறங்கி நடக்கையில் இவர்களைக் கவனித்தபடி கடந்த இரண்டு பையன்கள் தங்களுக்குள் பேசிச் சிரிப்பதைப் பார்த்தான்.

ராஜுகிட்டே சொல்லணும், இவளைப் பத்தி. அவன் கவிதையைக் கூட இவ படிச்சிருக்கேன்னு சொன்ன. ஏன், மூர்த்திக்கு கூட லெட்டர் எழுதலாம். எனக்கு புதுசா ஒரு friend கிடைச்சிருக்காண்ணு. அவளுக்கு இலக்கியம் தெரியும்ன்னு அவன சந்தோஷப்படுவான். உண்மையிலே சந்தோஷப் படுவான். பதினறுமாசமா நான் தவிச்சத்தவிப் பெல்லாம் அவனுக்குத் தெரியும். சீதாலக்ஷ்மி எனக்கு இல்லேன்னு ஆனப்பறம் நான் பட்ட ஹிம்சையெல்லாம் தெரியும். எத்தனை தைரியம் சொல்லியிருக்கான்; எனக்கு வரிஞ்சு வரிஞ்சு பக்கம் பக்கமா எத்தனை லெட்டர் எழுதித் தேத்தியிருக்கான்என்னை. ஆத்துக்கு போனதுமே எழுத ஆரம்பிச்சுடலாம். இவகிட்ட பேசினதெல்லாம் எழுதணும். சிகரெட்டை நிறுத்துங்கோன்னு சொனனதைக் கூட எழுதணும். ஆன, அவ friend தாங்கறதை நிச்சயம் எழுதிடணும், வெறும் Friend தான்னு சொன்ன மூர்த்தி நம்புவான... நம்பும்படியா எழுதணும். திருப்பித் திருப்பி அவ சினேகிதிதான்கிறதைத் சொல்லி அவனை வேறேஎதுபத்தியும்யோசிக்கமுடியாதபடி எழுதணும், எழுதறது நம்மகிட்டதானே இருக்கு.

ஆனா இவ எனக்கு friend தானே... நிச்சயம் friend தான். ராஜுமாதிரி, மூர்த்தி மாதிரி என்னைத் தட்டிக் கொடுக்கரு. என் மீது அனுதாபப்படுகிற friend, குரல் கம்ம... இது எதுல கொண்டு போய் விடும் தெரியுமான்னு கேட்டாளே. அவனுக்கு சீதாவின் மூக்குத்தி நினைவுக்குவந்தது. பிந்து மூக்குத்தி போட்டுக்கலே. ஆனா சீதாகண் மாதிரியே பெரியகண்... இவ பூசின மாதிரி இருக்கா; சீதா ஒடிசல். இவளைவிட ஒரு பிடி உயரம் கூட, சாட்டைமாதிரின்னு இருக்கும் பின்னல். பம்மென்று தோளில் படர்ந்த இவள் கூந்தலை நினைத்துக் கொண்டான். நெத்திலேந்து விரல்விட்டு அளைஞ்சா, கொறைஞ்சது நாலு இடத்திலியாவது சிக்கிக்கும். புஸ்மாஸுரி. புஸ்மாஸுரி. கூந்தலுக்குள் சொருகுவதாய் விரல்களைப் பிரித்துக் கொண்டு வலதுகையை காற்றில் வீசினான். பட்டென்று புறங்கை எதன்மீதோ மோதிற்று. வலிதாங்காமல் கையை இழுத்துக் கொண்டு பின்னால் பார்த்தான். இவனுக்கு வெகு அருகில் ரிக்ஷா ஒன்று வந்து கொண்டிருந்தது. ரிக்ஷாகாரன் குனிந்த தலையை நிமிர்த்தினான், ஏர்காலைப் பார்த்தான். திரும்பி இவனைப் பார்த்தான். பிறகு ரிக்ஷாவை விலக்கிச் சாலையின் மையத்திற்கு ஓட்டிப் போனான். ரிக்ஷாவில் ஆறு ஏழு வாழைத்தார்கள் அடுக்கி வைக்கப் பட்டிருந்தன. உட்காரும் இடத்தில் கூட வாழைத்தார்கள் வைக்கப்பட்டிருந்தன. எல்லாம் காய் வெட்டாக, பச்சை நிறமாக உள்ள பழங்கள். ஒரு பழம் கூட மஞ்சள் இல்லை. கடையில் கொண்டு போய் தொங்கவிட்டால் பழுத்துவிடும். இந்த வெய்யில் காற்றுக்கே கனிந்து போய்விடும். வைக்கோலை மூடி புழுங்கவிட்டால் சீக்கிரமே கனிந்து விடலாம். கடைக்காரன் சீக்கிரம் கனிய விடமாட்டான். விற்க வேண்டாமா. ரிக்ஷாவின் சக்கரம் இவனுக்கிணையாக உருண்டு கொண்டிருந்ததைக் கவனித்தான். சட்டம் தெளிவாகாத சுழற்சி இருந்தாலும் வேகம் என்னவோ இவன் நடை வேகம்தான். ஒரு வேளை நம் காலும் நம்முடைய வீச்சில் உருவமில்லாது மறையுமோ. இவன் வேஷ்டியை மடித்துக் கட்டிக் கொண்டான். பாதங்களின் வடிவு தெளிவாய்த் தெரிந்தது.

சீதாவுக்குக் குறுகல் பாதங்கள். பிந்துவுக்கு—இவன் அவள் பாதங்களை நினைவு படுத்திப் பார்த்தான். நினைவுக்கு வரவில்லை. நாளைக்கு பார்க்கணும், உடம்பின் வெளுப்பு கண்டிப்பாய் அவள் பாதங்களிலும் இருக்கும். தன் பாதங்களையே பார்த்து வந்ததில் ரிக்ஷாவின் அருகில் போய்விட, சட்டென்று ஏர்காலில் கையை ஊன்றித் தன்னை விலக்கிக் கொண்டான். அந்தச் சின்ன அசைவில் ரிக்ஷாவின் ஓட்டம் தடைப் படவில்லை. ரிக்ஷாக்காரன் இவனைப் பார்த்துச் சிரித்தான்.

என்னசார் உனுக்குள்ளேயே பேசிகினு வரே...

இவன் வேஷ்டியை இறுக்கிக் கொண்டு பதிலுக்குச் சிரித்தான். ஹாங்...என்று ஆமோதிப்பதுமாதிரி குரலெழுப்பினான். ரிக்ஷாகாரன் சிரிப்பு இவனுக்கு இதமாக இருந்தது. அவனும் நம்மைப்போல் அதிகம் யோசிக்கிற வகை இருக்க வேண்டும். உட்கார்ந்து யோசிப்பதைவிட இப்படி ரிக்ஷாவை ஓட்டிக் கொண்டே யோசிப்பது அவனுக்கு அனுபவமாக இருக்க வேண்டும்.

இவன் ரிக்ஷாவின் கூடவே நடந்தான். ரிக்ஷாக்காரனின் ஈரமுதுகில் ஒரு இலை ஒட்டிக் கொண்டிருந்தது. அதைச் சுண்டி எறிந்து விடலாம், ஆனால் ஏர்காலில் போய் முட்ட வேண்டியிருக்கும். மீண்டும் ரிக்ஷாக்காரன் சிரிப்பான் என்பது என்ன நிச்சயம். இவன் வேஷ்டியை ஒருதரம் பிரித்துச் சொருகிக் கொண்டு காலை வீசி நடந்தான்.

எந்தா சாரே...வாழைத்தார் வாங்கிட்டு போதோ, எந்தா விலை? பெட்டிக் கடை நாயரின் குரல் தெருவில் எல்லோரையும் திருப்பிற்று. இவனுக்கு முன்னே நடந்து கொண்டிருந்த ஒரு அம்மாள் ஒதுங்கி நின்று இவனுக்கும் ரிக்ஷாவுக்கும் வழி விட்டாள்.

என்னுதில்லேப்பா...அது ஏதோவண்டி இவன் நடப்பதை நிறுத்தவில்லை. நா அநாகரிகமானவன். பிந்துவைப் பே இவனுக்கு மெல்லப் பேசத் தெரியாது என் நினைத்துக் கொண்டான். அதிக சந்தோ ஏற்பட்டால் கூடப் பிந்து கத்தமாட்டா அப்பா...என்று நெஞ்சில் கைவைத்துக் கொண்டு லேசாய்க் கூவுவாள், அவ்வளவு தான். ஒரு வேளை கோபம் வந்தால் கத்துவாளோ ..இருக்காது...பிந்து மாதிரி பெண்கள் கோபம் கொண்டால் உம்மென்று உட்கார்ந்து கொள்வார்கள். இல்லை, அறைக்குள்

புகுந்து கதவைத் தாழிட்டு கட்டிலில் படுத்து விம்மி விம்மி அழுவார்கள். கட்டில் விளிம்பில் உட்கார்ந்து தலையை வருடி அவர்களைச் சமாதானப் படுத்திவிடலாம். பிந்துவின் கூந்தல் வருடுவதற்கும் இதமாய் இருக்கும்.

தெருவின் வளைவில், திருப்பத்திற்காக ரிக்ஷாவின் வேகம் மட்டுப்படுத்தப்பட்டது. ரிக்ஷாக்காரன் இப்போது இவனுக்கு இணையாக வந்து கொண்டிருந்தான். எதிர்ப்பக்கம் சைக்கிள் மணி கிணு கிணுத்தது.. இவனுடைய ஆபீஸ் சிநேகிதன் கையசைத்தான் ஹாய் ராஜாராம் எங்கே போய்க்கிட்டிருக்கே இதென்ன... வாழைப்பழம்... தார்தாரா... போடா fool... நான் வீட்டுக்குப் போய்ண்டிருக்கேன். வாழைத்தார் எங்கயோ கடைக்குப் போறது. அவனுக்கு நிற்க இஷ்டமில்லே, இந்த மடையன் கிட்டே பேசறதைவிட வீட்டுக்கே போகலாம். போய் லெட்டர் எழுதலாம் மூர்த்திக்கு...பிந்துவைப் பத்தி...

இவன் வெகு விரைவாக ரிக்ஷாவைக் கடந்து நடக்க ஆரம்பித்தான். வெய்யில் பிடரியைக்கடித்து ஹிம்ஸித்தது. இந்தத் தெரு முழுக்கப் போய் திரும்பினுத்தான் வீடு வரும். பேசாம இருந்துட்டே வந்திருக்கலாமோ... வெய்யில் தாழறவரைக்குமாவது பேசிக் கொண்டிருந்திருக்கலாம்... என்ன பேசறது...உங்களைப் பத்தி ஒன்னும் சொல்லவேல்லியே பிந்து...சொல்லுங்களேன். நீங்க ஏன் இன்னும் கல்யாணம் பண்ணிக்கலே... சமீபத்தில் ஏதாவது கல்யாணம் பண்ணிக்கறதா ஐடியா உண்டா...

சை... இவன் ரிக்ஷாவைப் பார்த்தான். இரைக்க இரைக்க தூரத்திக்கொண்டிருந்தது. பாவம்.. இன்னும் எவ்வவு தூரம் போகணுமோ. திரும்பிப் பார்த்தபடி நடந்ததில் வேகம் குறைந்தது. ரிக்ஷா நெருங்கியது. இவன் நடையை துரிதப்படுத்தினான்.

தெரு மரத்தடியில் வெற்றிலைக் குதப்பிக் கொண்டிருந்த கூடைக்காரி இவன் வழியில் எச்சில் துப்பினாள். எச்சிலைத் தாண்டி விட்டு அவளை முறைத்தான்.

என்ன ஐயரே என்னுவிலேக்குப் புடிச்சே. பழத்தே...அவளுடைய காவிப்பற்கள் இவனை பார்த்துச் சிரித்தன.

ஒரு கணம் பளீரென்று தலையில் வெடி வெடிக்கிறமாதிரி ஒரு வலி மின்னிற்று. அழுந்தத் தலையைப்பிடித்துக் கொண்டு மரத்தடியில் நின்று விட்டான். தொண்டை வரண்டது...டசன் பதிமூன் ரூபாம்மா.. என்று பதில் சொன்னான். என்னது டசன் பதிமூனு இரண்டு மூன்று குரல்கள் காதில் ஒலித்தன. இவனுக்கு கண்ணை இருட்டிக் கொண்டு வந்தது... ●

## ஒரு கவிதை

காலையில் தவறாமல் உதிக்கும்
சூரியன் என் காதலென்றான்.
துடித்துச் சிவந்தன பெண்விழிகள்
இரவுகளை என்றும் இழந்து.

—ந. மகாகணபதி

---

# Pari Theke Paleye

சென்ற வாரம் 'கடக்'கின் (Ritwik Ghatak) 'Bari theke Paleye' (escaping from the house) என்ற படம் பார்த்தேன். கிட்டத் தட்ட 1959 இல் வெளிவந்த படம் இது.

Ritwik Ghatak ஐந்து படங்களை டைரக்ட் செய்துள்ளார். அவை :

Ajantrik (non - mechanical)

Bari theke Paleye

Komol Ganthar (soft காந்தாரி ராகம்)

Megha Daca thara (stars covered by clouds)

Subarna (சுபர்ண ஆறு)

இவரது 'பாரி தேகே பாலியே' பார்க்காத வர்கள் இந்தியத் திரைப்பட உலகில் நடந்த ஒரு முக்கிய விஷயத்தைப் பார்க்காதவர்கள் ஆவார்கள். இந்தப்படம் Ghatak கின் தன்மையை, கலைஞனின் உருவத்தைக் காண் பிக்கிறது.

ஒரு சிறுவன் கிராமத்திலிருந்து தந்தை யின் கோபத்திற்குப் பயந்து (இவன் கடவு ளுக்கு வைக்கும் பிரசாதத்தைத் தின்று விடுவ தால்) கல்கத்தாவிற்கு ஓடி வருகிறான். அவன் மூலம் 'கடக்' இந்த நகரத்தை நமக்குக் காண் பிக்கிறார். இந்த நகரத்தின் தன்மைகளை, வாழத் தவிக்கும் நிலைகளை, Bustee களை, 'கெட்டோ' வினும் கேடு கெட்ட சேரிகளை, மஸ்தான்களை, ஊர்வலங்களை நம்மை அனுப விக்கச் செய்கிறார். இவரது இந்தப் படத்தில் 'struggle for existence in this city' மிக நன்றாகத் தெரிகிறது.

நகரத்தில் முதலில் காஞ்சு (பையனின் பெயர்) சந்திப்பவன் கிழவர் வேஷம் போட்ட மிட்டாய் விற்கும் இளைஞன் ஹரிதாஸ் (Kali Banerjee) அவன் தாடியை வீட்டில் அவிழ்ப் பதைக் காஞ்சு பார்க்கிறான். நகரத்து மக் களின் முகமூடி, வேஷம் போடும் தன்மைகள் அவிழ்கின்றன.

சிறுவன் ஹௌரா பாலத்தில் நின்று கங்கையில் போகும் steamer களைப் பார்த்து வியக்கிறான். இதைப் பின்புறமாகக் காண் பிக்கிறார் டைரக்டர். காலை வேளையின் கல்கத்தா நம்மைப் பிரமிப்பூட்டச் செய்கிறது.

ஒரு ஊர்வலத்துடன் 'இங்குலாப் ஜிந்தா பாத்' கோஷம் போட்டுக் கொண்டே போகி றான் சிறுவன். அவன் துடிப்பு, spirit of adventure, கல்கத்தா சிறுவர்களுக்கே உள்ள தன்மையாகும்.

மற்றொரு காட்சி. ஒரு கல்யாண வீட்டிற் குள் நுழையும் பையன் அங்கே ஒரு சிறு பெண்ணுடன் செய்யும் விவாதம்-

சிறுமி : What is your name?

இவன் : Kanchan......

சிறுமி : Tell the spelling of 'maintain'

இவன் : m...e...n...t...i n

சிறுமி : தப்பு தப்பு

இவன் : நீ 'சூர்பனகை' spelling சொல்லு

சிறுமி : நீதான் கடோத்கஜன்

அந்தச் சிறுமிபால் இவனுக்கு விவரிக்க முடியாத காதல் ஏற்படுகிறது. அது ஓவிய மாகவோ, சித்திரமாகவோ இல்லாமல் புகை யாகப் பாலுணர்ச்சி தெரியும் பருவம். அந்தக் கல்யாண வீட்டில் திண்டு ஒன்றில் தூங்கு கிறான். அவளுடன், தான் சிறிய படகு ஒன்றில் ஏறி வீடு செல்வதாக—அம்மா இரு வரையும் அணைத்துக் கொள்வதாக—அப்பா வயல் வெளிகளில் இருவரையும் துரத்தி வரு வதாகக்கனவு காண்கிறான். சத்யஜித்ரேயைத் தூக்கி அடிக்கிறார் Ghatak இந்தக் காட்சி களில்.

அவள் வீட்டிற்கு, சந்தர்ப்ப வசத்தில் அவளைத் தெருவில் பார்த்து, பின்னர் செல் கிறான். சிறுமியின் அம்மா நோயாளி. அவளும் கிராமத்திலிருந்து நகரம் வந்தவள். இவனைப் பார்த்ததும் கிராம வாழ்க்கையை நினைவு கூர்ந்து மகிழ்கிறாள்.

இவன் காசின்றித் தெருவில் அலையும் பொழுது நிலக்கரி திருடிப் பிழை என்று உள் ளூர் தாதா (local goonda) அறிவுரை கூறு கிறான். அதைச் செய்யப்போய் இவன் அடிபடுகிறான் மற்ற மஸ்தான்களிடம்.

சிறுவன் : நகரத்தில் ஏன் இத்தனை அவஸ்த்தை?

தாடித் தாத்தா : நகரங்களில் அவஸ்த் தை மிகவும் சுலபமாகப் புலப்படும் ஒன்று. நானும் உன்னைப் போல் கிழக்கு வங்கக் கிரா மத்திலிருந்து வந்தவன்தான். நகரங்கள் துன்பங்கள் சேருமிடம்.

கடைசியில் இவனை ஹரிதாஸ் (காளி பானர்ஜி) தன்னுடைய பொய்த்தாடி, சிறிய கம்பளி போன்றவற்றைக் கொடுத்து வீடு திரும்பச் சொல்கிறான். கிராமங்களுக்கு மக்கள் திரும்ப வேண்டும் நகரத்தின் வேஷம் களைந்து என்பதை அருமையாக உணர்த்து

கிருர். வசனங்கள் பொருள் நிறைந்தவை. நம்மைத் தாக்குகின்றன.

சிறுவன் அவன் தாயாரிடம் முதல் காட்சியில் கேட்கிருன்.

சிறுவன் : அம்மா உனக்கு Eldorado பயணங்கள் பற்றித் தெரியுமா?

அம்மா : தெரியாது

காஞ்சு : என் அப்பாவிற்குக் கூடத் தான் தெரியாது. ஆனுலும் அவர் தலைமையாசிரியராக இருந்தார்.

இந்தப் படத்திற்கும் 'யார் பையன்?' (கிருஷ்ணன் பஞ்சு எடுத்தது என நினைக்கிறேன்) படத்திற்கும் சில Similarity களைக் காண முடிந்தது. கடைசியில் பையன் கிராமத்திற்குத் திரும்புவதற்கான motivation ஆழமாகப் பதியவில்லை. சிவராம சக்ரவர்த்தி எழுதிய நாவலின் குறையோ இது?

திரும்பப் படகில் வீடு வருகிருன். தந்தை அமைதியாகக் கேட்கிருர்.

அப்பா : உனக்கு கல்கத்தாவில் எது ரொம்பப் பிடித்தது?

காஞ்சு : பாபா எனக்கு நம் வீடுதான் மிகப் பிடித்தது.

இவரது படத்தில் காமிராவை மிகச் சரியாகப் பயன் படுத்துகிருர். சலீல் சௌத்திரியின் இசை ரம்மியமாக உள்ளது.

Ritwik Ghatak இந்தியத் திரைப்பட உலகில் recognise ஆகாமல், பல படங்கள் எடுக்காமல் இருந்தது நமது துரதிருஷ்டமே. 'ரே' பிறந்த மண்ணில் அவரை மிஞ்சி விட்ட Ritwik Ghatak ஐ காலம் புரிந்துக் கொள்ளும். இப்பொழுது அவர் Mujib—இந்திரா Documentaries எடுத்து ஜீவிக்கிருர். இதுவும் நமது துரதிருஷ்டமே.

—ரா. வைத்தியநாதன்.

# அக்கம் பக்கம்

'இலக்கியச் சிந்தனை'யின் இரண்டாவது ஆண்டு விழா வழக்கம் போலத தமிழ் வருடப் பிறப்பன்று நடந்தது.

தமிழ்ப் பேச்சாளர்கள், தன்னையே ஒரு சிரிப்பு மூட்டையாகப் பண்ணிக் கொண்டு கூட்டத்தைச் சிரிக்கச்செய்யும்உத்திபுதிதல்ல. இலக்கியச் சிந்தனைக் கூட்டங்களுக்கு இது நிச்சயம் புதிதல்ல.

போன முறை அமைப்பாளர்களுக்கு மகராஜனும், சீனிவாசராகவனும் கிடைத்தார்கள். இந்தத் தடவை எஸ். கே. நாயரும் நா. காமராசனும் கிடைத்தார்கள். எப்படியோ அமைப்பாளர்களுக்கு வருடாவருடம் இரண்டுபேர்கள் இப்படி கிடைத்துவிடுகிருர்கள்

தலைமை வகிப்பவர்களுக்குத் தற்கால இலக்கியப் பத்திரிகைகள் பற்றியோ, இலக்கியப் பிரக்ஞையோடு எழுதும் எழுத்தாளர்கள் பற்றியோ தெரிந்திருக்கக் கூடாது என்பது அத்யாவசியமான யோக்யதாம்சமாக இருக்க வேண்டும் போலிருக்கிறது. அதனுல்தான் சென்ற வருடம் தலைமைதாங்கிய மகராஜனைப் போலவே நா. மகாலிங்கமும் 'கசடதபற' ஒரு இதழ் கூட நான் பார்த்ததும் இல்லை, படித்ததும் இல்லை என்று மகிழ்ச்சியோடு சொல்லிக் கொண்டார்.

'சுதந்திரத்திற்குப் பிறகு தமிழ் நாவல்கள்' எனபது பற்றி டாக்டர் எஸ். கே. நாயர் ஆங்கிலத்தில் கட்டுரை வாசித்தார். எந்தப் பிரபல எழுத்தாளரையும் விரோதித்துக் கொள்ளாமல் தனது உரையை வெகு சாமர்த்தியமாகத் தயாரித்திருந்ததைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

அடுத்தது நா. காமராசனின் கட்டுரை. தற்காலத் தமிழ்க் கவிதைகளின் மதிப்பீடு பற்றியது. 'நான் எந்தக் கவிஞரையும் தனிப்பட்ட முறையில் பார்க்காது அவரது படைப்புக்களை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு விமர்சனம் செய்யப் போகிறேன்' என்ற பீடிகையோடு ஆரம்பித்து முழுக்க முழுக்கக் கவிஞர்களைப் பற்றிய personalவிவகாரங்களைச் சொல்லிக் கூட்டத்தில் கைத்தட்டலைச் சம்பாதித்துக் கொண்டார். தமிழில் ஒரு புதிய பத்திரிகை வெளி வருகிறது என்ருல் டெல்லி கடுங்குளிரிலும் சாலை இளந்திரையனுக்கு மூக்கில் வேர்த்து விடும்; கவிதை எழுதிவிடுவார் போன்றவைகள் தான் விமர்சகர் நா. காமராசனின் பாரபட்சமற்ற விமர்சனம். வெகு ஜாக்கிரதையோடு ஞானக்கூத்தனைத் தனது உரையில் எங்கேயும் சொல்லி விடாமல் ஒதுக்கிக் கொண்டார். இது பாரபட்சமற்ற விமர்சன கர்த்தாவைப் பாராட்ட மற்ருெரு அம்சம்.

1971 ஆம் ஆண்டின் பன்னிரண்டு சிறந்த சிறுகதைகளிலிருந்து ஒரு கதையை தேர்ந்தெடுக்கும் பொறுப்பு சுந்தர ராமசாமியினுடையது. அவரின் விமர்சனக் கட்டுரையில் ஆழத்தையும், தெளிவையும் காண முடிந்தது.

—நா. கிருஷ்ணமூர்த்தி.

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.